# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்

## உள்ளே





" சிகிச்சை பெற்றுக் கொள்பவர்கள் இரண்டு அம்சங்களை வைத்துக் கொள்ளவேண்டும். தங்கள் மனதில் தோன்றும் பயம் மற்றும் பதற்ற உணர்வுகளையும் எதிர்மறைச் சிந்தனைகளையும் இயற்கை என்று மனப் பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். -இது முதல் அம்சம். சிகிச்சையளிக்கும் மருத்துவர் மீது முழு நம்பிக்கை வைக்க வேண்டும். -இதுதான் இரண்டாவது அம்சம்.

- ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
V. A. P. Sharavanan : 99942 05880
Dr. N. Kailasam : 94432 90559
K. S. Jeevamani : 97891 65555
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



அட்டை படம் :
Orange Designer Salem. Ravi Sankar

This Book Designed By:
PRAKASH PRINTERS, SALEM
Mobile : 9843786655


# துறையூரில் (சிக்கத்தம்பூர் பாளையம்)
# 2 நாள்
# ஞானமுகாம்

வழங்குபவர் :
**ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

பிரமானந்த சுவாமிகளின் குருபூஜை விழா, திருமூலர் ஜெயந்தி விழாவை முன்னிட்டு துறையூரில் பிரமானந்த சுவாமிகள் மடாலயத்தில் அந்தர் யோகம் (ஞான முகாம்) நடைபெற உள்ளது.

நாள் : 13 -10-2016 வியாழன்
நேரம் : காலை 10:00 மணி - 01:00 மணி வரை
இரவு 7:00 மணிக்கு மேல் சத்சங்கம் (கலந்துரையாடல்)
14-10-2016 வெள்ளி
காலை 10:00 மணி - 11:00 மணி வரை
இடம் : **பிரமானந்த சுவாமிகள் மடாலயம், இராமகிருஷ்ண வேதாந்த ஆஸ்ரமம்,**

முன்பதிவு அவசியம். தங்கும் இடவசதி உள்ளது.
படுக்கை வசதியுடன் வரவும்.

அனுமதி இலவசம்

மேலும் விபரங்களுக்கு
ஸ்ரீ பகவத் மிஷன்
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 3.
கைப்பேசி : 9942219065, 9994205880, 9789165555.

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது **"Pathai Missing"** என்று **Type** செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு **SMS** அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா - ரூ.100/- ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/-**
**ஆயுள் சந்தா - ரூ, 1000/-**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத்தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# அறுவை சிகிச்சை

அன்பர் ஒருவர் இப்படி கேட்டுக் கொண்டார்:

"நான் மருத்துவமனையிலுள்ள ஆபரேசன் தியேட்டரில் உதவியாளராக வேலை பார்க்கிறேன். அனேகமாக தினமும் ஏதாவது ஒரு ஆபரேசன் நடந்து கொண்டே தான் இருக்கும். நான் பணியாற்றுவது ஒரு பிரபலமான மருத்துவமனை. ஆகவே பல சிக்கலான அறுவை சிகிச்சை கூட நடப்பதுண்டு...

"அறுவை சிகிச்சையை எதிர் கொள்ளும் நோயாளிகள் மற்றும் அவர்களுடைய உறவினர்கள் அனைவரும் ஆபரேசனை மனக்கலக்கத்துடனேயே எதிர் கொள்கிறார்கள். அவர்களுக்கு கவுன்சலிங் – ஆலோசனைகள் வழங்கப்படுகின்றன. ஆனாலும் கூட நோயாளிகள் மனப்பதற்றத்துடனேயே இருக்கிறார்கள். இதனால் அவர்களுடைய பாதிப்பு தான் அதிகமாகின்றது. சிலருக்கு அறுவை சிகிச்சையிலேயே சிக்கல் ஏற்பட்டுவிடுகிறது. சிலருக்கு அறுவை சிகிச்சைக்குப் பிறகு கூட சிக்கல் ஏற்பட்டு விடுகிறது...

"சிகிச்சை பெறும் நோயாளிகள் எவ்வாறு செயல்பட வேண்டும்? அவர்களுக்குக் கவுன்சிலிங் கொடுப்பவர்கள் எவ்வாறு அதனை மேற்கொள்ள வேண்டும்? இது பற்றி நீங்கள் ஆலோசனை வழங்கினால் அது எங்களுக்கு உதவியாக இருக்கும்."

–இப்படி அவர் கோரிக்கை விடுத்தார்.

அவரைப் பொறுத்த வரையிலும் அவர் தமது தொழில் நிமித்தமாகப் பல நோயாளிகளுடன் பழகி வருகிறார். அவர்களுடைய பிரச்சினைகளை அவர் நேரடியாகத் தெரிந்திருக்கிறார்.

ஆனால் நம்மைப் பொறுத்த வரையிலும் நமக்கு அப்படித் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு மிகவும் குறைவே. மேலும் அத்தகைய நோயாளிகள் எவரும் நம்மிடம் ஆலோசனைக்கும் வருவதில்லை.

ஆகவே இந்தக் கட்டுரை எந்த அளவில் அவர்களுக்குப் பயன்படும் எனத் தெரியவில்லை. நமது அணுகுமுறையையும் அவர்களுக்கு பரிட்சார்த்தமாகவே – ஒரு சோதனை முயற்சியாகவே கொடுத்துள்ளேன்.

நமது கருத்துகளில் தெளிவு பெற்ற சிலர், சில சிக்கலான அறுவை சிகிச்சைகளைக் கூட செய்து கொண்டிருக்கின்றனர்.

நமது கருத்துகளில் தெளிவு பெற்றவர்களைப் பொறுத்தவரையில், அவர்களுக்கு இதற்கென தனியே எந்த ஆலோசனையையும் வழங்கத்தேவையில்லை. அவர்களால் மிகச் சிறப்பாக, எத்தகைய சிக்கலான அறுவை சிகிச்சையையும் எதிர் கொள்ள முடியும்.

அதற்காக, அறுவை சிகிச்சை மேற்கொள்பவர்களையெல்லாம் நமது நூல்களைக் கற்றுத் தேர்ந்திடுமாறு கூற முடியாது.

இந்த ஒரு பிரச்சினையை மட்டும் நாம் இப்போது எடுத்துக் கொள்வோம்.

உதாரணமாக ஒரு நோயாளி இருதய அறுவை சிகிச்சையை எதிர்கொள்வதாக வைத்துக் கொள்வோம்.

அவருக்கு நாம் என்ன ஆலோசனை வழங்குவது?

''மனதை அமைதியாக வைத்துக்

கொள்ளுங்கள். பதற்றமான எதையும் நினைக்காமல், இறைவனையோ நல்ல நிகழ்வுகளையோ எண்ணிக் கொள்ளுங்கள். அனைத்தும் நலமாகவே நடக்கும்.”

–இப்படி ஆலோசனை வழங்கினால் போதுமா?

எனது சகோதரி மகளை, பிரசவத்துக்காக மருத்துவமனையில் அனுமதித்திருந்தார்கள். முதல் நாள் பரிசோதனையின் போது, இரண்டு வாரங்களுக்குப் பிறகு தான் பிரசவம் இருக்கும். எல்லாம் சரியாக இருக்கிறது. சுகப் பிரசவம் தான் ஏற்படும் என்று கூறி அனுப்பியிருந்தார்கள்.

ஆனால் எதிர்பாராதவிதமாக மறுநாளே பிரசவ வலி ஏற்பட்டதால் மருத்துவமனையில் சேர்த்திருந்தார்கள். அறுவை சிகிச்சை செய்து தான் குழந்தையை எடுக்க வேண்டும் என்றும் கூறி விட்டார்கள்.

அதன்படி அறுவை சிகிச்சை செய்து குழந்தையை எடுத்துள்ளார்கள்.

நான் மருத்துவமனைக்கு வரும் போது எனது சகோதரி மகளை சிகிச்சை முடித்து அறைக்குக் கொண்டு வந்து விட்டிருந்தார்கள். அவளுடைய உடம்பில் ஏதேதோ உபகரணங்களை பொருத்தியிருந்தார்கள்.

இதயத்துடிப்பு வித்தியாசமாக இருப்பதாகவும், இரத்த அழுத்தம் அதிகமாக இருப்பதாகவும் கூறி அந்த உபகரணங்களை பொருத்தியிருந்தார்கள்.

‘‘படித்த பெண்ணான நீ இப்படிப் பயப்படலாமா? நீ தைரியமாக இருந்தால் தான் உன் உடல்நிலை சரியாகும்” – இப்படி மருத்துவர் கூறுவதாக அவள் கூறினாள்.

அவளிடம் பேசினேன்:

“இரண்டு வாரம் கழித்து தான் பிரசவம் ஏற்படும் என்று கூறியிருந்த நிலையில் எதிர்பாராதவாறு இப்படிப் பிரசவத்தை எதிர் கொள்ள நேர்ந்ததே ஒரு அதிர்ச்சியை நமக்குக் கொடுத்து விடும். அது பற்றிய முன்னனுபவம் எதுவும் உனக்குக் கிடையாது. அதுவும் போதாதென்று சுகப்பிரசவம் சாத்தியம் இல்லையெனக் கூறி அறுவை சிகிச்சையையும் செய்துள்ளார்கள். அதிர்ச்சிகரமான சூழ்நிலையை நீ அடுக்கடுக்காகச் சந்தித்துள்ளாய். உன்னுடைய நிலையில் எவர் இருந்தாலும் அவர்களுக்கு இத்தகைய பதற்றம் ஏற்படவே செய்யும் எல்லோருக்கும் ஏற்படக் கூடிய ஒன்று தான் உனக்கும் ஏற்பட்டுள்ளது.”

–இப்படி அவளிடம் கூறியது தான் தாமதம், அவளுடைய இரத்த அழுத்தம், இதயத்துடிப்பு அனைத்தும் வேகமாகக் குறைந்து சமநிலைக்கு வந்து விட்டன.

அறுவை சிகிச்சையை எதிர்கொள்ளும் அனைவருக்கும் இவ்வாறு பதற்றம் ஏற்படத்தான் செய்யும்.

மனதை அமைதியாக்க முயற்சி செய்வது அந்தப் பதற்றத்தை மேலும் அதிகரிக்கவே செய்யும்.

பதற்றத்தை மாற்ற முயற்சி செய்யாமல், அனைவருக்கும் ஏற்படும் பதற்றமே தனக்கும் வந்துள்ளதாக எடுத்துக் கொள்வதுதான் அந்தப் பதற்றத்திலிருந்து விடுபடும் வழி.

அவருக்குப் பதற்றம் ஏற்பட்டாலும் சரி, பயம் ஏற்பட்டாலும் சரி தேவையற்ற எதிர்மறை சிந்தனைகள் ஏற்பட்டாலும் சரி, அவர் தனது மன உணர்ச்சிகளின் மீது குறை காணக் கூடாது. தனது மன உணர்ச்சிகளையும் எதிர்மறை சிந்தனைகளையும் இயற்கையான நிகழ்வாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மருத்துவருடன் அவருக்கு எத்தகைய உறவு இருக்க வேண்டும்?

விமானம் ஒன்று ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தது. நடு வானில் பறந்து கொண்டிருந்த விமானத்தில் திடீர் கோளாறு ஏற்பட்டது. விமானம் கட்டுப்பாட்டுக்குள் இயங்க மறுத்தது. அபாய அறிவிப்பும் கொடுக்கப்பட்டது. பயணிகள் அனைவரும் கதிகலங்கிப் போய் விட்டனர்.

ஒரு பயணியின் அருகில் எட்டு வயது பெண் குழந்தையொன்று உறவினர் எவரும் இல்லாமல் தனிமையாகப் பயணம் செய்து கொண்டிருந்தது. அறிவிப்பைக் கேட்டு அனைவரும் பயந்து நடுங்கிய போதும் அந்தக் குழந்தை சிறிதும் பயப்படாமல் அமைதியாக இருந்து தனது செல்போனில் கேம் எதனையோ விளையாடிக் கொண்டிருந்தது.

அரைமணி நேரப் போராட்டத்துக்குப் பிறகு விமானம் விமானியின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது. மரணத்தின் விளிம்புக்குச் சென்ற பயணிகள் அனைவரும் சகஜ நிலைக்குத் திரும்பினர்.

குழந்தையின் அருகிலிருந்த பயணி குழந்தையிடம் கேட்டார்:

“விமானம் கட்டுப்பாட்டை இழந்து ஆபத்தான கட்டத்துக்குப் போனது உனக்குத் தெரியுமா?”

“ஓ, தெரியுமே!” என்றது அந்தக் குழந்தை.

அவர் ஆச்சரியமாகக் கேட்டார்: "நாங்கள் அனைவரும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு மூச்சை விடக் கூட பயந்து கொண்டிருந்தோம். உன் வீட்டுப் பெரியவர்கள் எவருமே பக்கத்தில் இல்லாத நிலையில் கூட எந்தப் பயமும் இல்லாமல் நீ எப்படி அமைதியாக உன் செல்போனில் கேம் விளையாட முடிந்தது?"

அந்தக் குழந்தை அமைதியாகப் பதில் கூறியது:

"விமானத்தை ஓட்டியது எனது அப்பா அல்லவா?"

தந்தை விமானத்தை ஓட்டும் போது குழந்தை ஏன் பயப்பட வேண்டும்?

சிகிச்சை பெற்றுக் கொள்பவர்கள் இந்த இரண்டு அம்சங்களையும் வைத்துக் கொள்ள வேண்டும்.

தங்கள் மனதில் தோன்றும் பயம் மற்றும் பதற்ற உணர்வுகளையும் எதிர்மறை சிந்தனைகளையும் இயற்கை என்று மனப் பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

-இது முதல் அம்சம்

சிகிச்சையளிக்கும் மருத்துவர் மீது முழு நம்பிக்கை வைக்க வேண்டும்.

-அந்தக் குழந்தையைப் போல.

-இதுதான் இரண்டாவது அம்சம்

சிகிச்சை பெறுபவர்களுக்கு உதவும் வகையில் மருத்துவர்களும் செயல்பட வேண்டும்.

அவர்கள் எவ்வாறு நடந்து கொள்வது உதவியாக அமையும்?

"பயப்படாதீர்கள்! தைரியமாக இருங்கள்!" என்ற வார்த்தைகளை மறந்து போய் கூட சிகிச்சை பெறுபவர்களிடம் கூறி விடக்கூடாது.

அது பயத்தையும், பதற்றத்தையுமே கொண்டு வந்து விடும்.

நோயாளிகளுடைய பிரச்சினை எளிதில் குணமாக்கக் கூடியது என்ற விபரத்தை மட்டும் ஆணித்தரமாக, மிகக் குறைந்த வார்த்தைகளில் கூறி உறுதியளிக்க வேண்டும், அதிக விளக்கம் சிக்கலைக் கொண்டு வந்து விடும்.

அது போல் அறுவை சிகிச்சையை மேற்கொள்ளப் போகும் மருத்துவரின் அசாதாரணமான திறமையையும் தகுதியையும் சுருக்கமான முறையில் நோயாளிக்குத் தெரிவித்து அவர் மீது நம்பிக்கையை ஏற்படுத்த வேண்டும்.

சிகிச்சை முடிந்த பிறகும் அந்த நம்பிக்கையைப் புதுப்பிக்க வேண்டும்.

"உங்களுடைய அறுவை சிகிச்சை 100 சதவீத வெற்றி. நீங்களும் மிக அருமையாக ஒத்துழைத்தீர்கள்" என்று நோயாளியைப் பாராட்ட வேண்டும்.

அறுவை சிகிச்சையின் போது நோயாளி மற்றும் உறவினர்களிடம் சம்மதக் கடிதம் வாங்குவதுண்டு.

அறுவை சிகிச்சையன்று ஒரு போதும் நோயாளியிடம் அத்தகைய கையெழுத்தை வாங்கக் கூடாது. முந்தைய தினங்களிலேயே வாங்கிக் கொள்ள வேண்டும். உறவினர்களிடம் வேண்டுமானால் அறுவை சிகிச்சை நாளில் வாங்கிக் கொள்ளலாம்.

தேவை ஏற்பட்டால் மீண்டும் சந்திப்போம்.





# கேள்வி? பதில்...

## பிரார்த்தனையும் – செயலும்

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:** நான் என்னுடைய எல்லாப் பிரச்சினைகளுக்கும் இறைவனிடம் பிரார்த்தனை செய்வதையே வழக்கமாக வைத்துக் கொண்டு இருக்கிறேன். கணவன், குழந்தைகள், பெற்றோர், உடன் பிறந்தோர் என அனைவரும் நலமாக இருக்க வேண்டும் என்று சதா பிரார்த்தனை செய்து கொண்டே இருப்பேன். கிட்டத்தட்ட 15 ஆண்டுகளாக பிரார்த்தனையில் ஈடுபட்டு வருகிறேன். அப்படிப் பிரார்த்தனையில் ஈடுபட்டும் குடும்பத்திலும், உறவிலும் பிரச்சினைகள் தீர்ந்தபாடில்லை. இந்த நிலையில் தான் பகவத் ஐயாவின் புத்தகங்களைப் படித்தேன். அதனால் பிரார்த்தனையில் இருந்து வந்த தீவிரம் குறைந்து விட்டது. நான் இனி யாருக்காகவும் பிரார்த்தனை செய்ய தேவையில்லையா? மன அமைதிக்காக எதுவும் செய்ய தேவையில்லை என்ற புரிதலே போதுமா? இந்தப் புரிதலே மற்றவர்களுக்கு தேவையான எல்லா நலனையும் செய்து விடுமா? இது போகவும் நான் மற்றவர்களின் நலனுக்காக வேறு எதுவும் செய்ய வேண்டாமா?

**பதில்:** பிரார்த்திக்கும் உதடுகளை விட உதவும் கரங்கள் உயர்ந்தது. மலையளவு பேச்சை விட கடுகளவு செயல் சிறந்தது. உங்களது பிரார்த்தனை உங்களுக்கு மட்டும் தான் தெரியும். உங்களைத் தவிர மற்ற யாருக்கும் தெரியாது. நீங்கள் யாருக்காக பிரார்த்தனை செய்கிறீர்களோ அவர்களுக்குக் கூட உங்கள் பிரார்த்தனை தெரியாது. இப்படி நாம் பிரார்த்திப்பது முழுவதும் நமது மனத் திருப்திக்காக மட்டுமே.

பிரார்த்தனையைப் பற்றி ஏதோ குறையாகக் கூறுவதாக எடுத்துக்கொள்ள வேண்டாம். பிரார்த்தனை என்பது ஆன்மிகத்தின் ஆரம்பக் கட்டம். பிரார்த்தனை என்பது மற்றவர்கள் நலமாக இருக்க வேண்டும் என்று நாம் மனோரீதியாக எண்ணிக்கொள்வது மட்டுமே. இப்படி நம் மனதில் மற்றவர்களுக்காகப் பிரார்த்திப்பதனால் அவர்களுக்குத் தேவையானவற்றை எல்லாம் செய்து விட்டோம் என்று எடுத்துக் கொள்ள முடியாது. மற்றவர்களுக்கான நமது பிரார்த்தனை என்பது அவர்களுக்கு நம்மால் என்ன செய்ய முடியுமோ அதை செய்வதின் மூலம் தான் முழுமை அடைகிறது. பிரார்த்தனையை விட அதற்கான செயலுக்கு வலிமை அதிகம். மற்றவர்களின் நலனுக்காக நாம் செய்யும் செயல் தான் ஆன்மிகத்தின் முடிவான நிலை.

பொதுவாக நடைமுறை வாழ்க்கையில் யாராக இருந்தாலும் எனக்கு என்ன செய்தாய் என்று தான் கேட்பார்களே தவிர யாரும் ஒரு போதும் எனக்காக என்ன நினைத்துக் கொண்டாய் என்று கேட்பதில்லை. அதனால் செயல் மட்டும் தான் நம்மையும் மற்றவர்களையும் இணைக்கும் பாலமாக இருக்கிறது.

நாம் மனதில் எண்ணிக்கொண்டு, பிரார்த்தித்துக் கொண்டு, வாழ்த்திக் கொண்டு இருப்பது நமக்கு வேண்டுமானால் திருப்தியைத் தரலாம். பெரிய மாற்றம் ஏற்பட்டு விடும் என்று நிச்சயமாகக் கூற முடியாது. நமது பிரார்த்தனையின் புறவடிவமான அவர்களுக்குத் தேவையானவற்றை நம்மால் என்ன செய்ய முடியுமோ அதை செய்வதின் மூலம் ஓரளவிற்கான மாற்றத்தை நம்மால் நிச்சயம் ஏற்படுத்த முடியும்.

நமக்கோ நம்மைச் சார்ந்தவர்களுக்கோ நாம் செயல் ரீதியாக என்ன செய்ய முடியுமோ அதை செய்வது ஒன்று மட்டும் தான் மாற்றத்தை ஏற்படுத்தும். நாம் மற்றவர்களிடம் வெறுமனே மனோரீதியாக தொடர்பு கொண்டு இருப்பதை விடச் செயல் ரீதியாக என்ன தொடர்பு கொண்டு இருக்கிறோமோ அது தான் நம்மையும் அவர்களையும் இணைக்கச் செய்யும். நாமும் இப்படி செயல் ரீதியாக செயல்படும் போது தான் நமக்கே ஒரு மனநிறைவு ஏற்படும்.

உதாரணமாக ஒரு பெண்மணியின் நடைமுறை வாழ்வில் நடந்த சம்பவத்தைப் பார்ப்போம். பெண்மணி ஒருவருக்கும் அவருடைய சகோதரிக்கும் இடையே ஏதோ ஒரு சின்ன கருத்து வேறுபாட்டால் மனவருத்தம் ஏற்பட்டது. சகோதரியும் கோபித்துக் கொண்டு போய்விட்டார். இருவரும் பேசிக் கொள்ளாமல் சில ஆண்டுகள் போய்விட்டன. ஆனாலும் இந்தப் பெண்மணி தன்னுடைய சகோதரி மற்றும் அவர்கள் குழந்தைகள், குடும்பம் நன்றாக இருக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டு இருப்பார். ஏதாவது பொதுவான குடும்ப நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டாலும் இருவரும் எதுவும் பேசிக் கொள்வதில்லை. இப்படியே போய் கொண்டு இருந்தது.

இந்தப் பெண்மணி பகவத் ஐயாவின் புரிதலுக்கு வந்த பிறகு ஏதோ ஒரு சின்ன கருத்து வேறுபாடு காரணத்திற்காக நாம் இப்படி இத்தனை ஆண்டுகள் பேசாமல் இருப்பது தவறு, நாம் இப்படி இருப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தார். எப்படியோ இந்தக் கருத்து வேறுபாட்டிற்கு நாம் காரணமாக இருந்து விட்டோம். மனதின் இயக்கத்தை புரிந்து கொண்ட நாம் தான் மற்றவர்களை அனுசரித்துப் போக வேண்டும் என்பதை நன்றாக புரிந்து கொண்டார்.

அகத்தைப் பொருத்த அளவில் நாம் நிராயுதபாணி என்பதால் புறத்தில் இந்த விசயம் சம்பந்தமாக நாம் தான் செயல்பட வேண்டும் என்று

முடிவு எடுத்தார். நாம் ஏற்படுத்திய கருத்து வேறுபாட்டுப் பிரச்சினையை நாம் தான் மாற்ற வேண்டும். நாம் தான் முடிவுக்கு கொண்டு வர வேண்டும் என ஏக மனதாக முடிவு எடுத்தார். தன்னுடைய சகோதரிக்குக் கிட்டத்தட்ட 6 ஆண்டுகளுக்குப் பிறகு போன் செய்து, “நான் உன்னிடம் கொஞ்ச நேரம் மனம் விட்டுப் பேச வேண்டும். எப்போது வந்து உன்னை நேரில் சந்தித்துப் பேசுவது” எனக் கேட்டார்.

தன்னுடைய அக்காவின் செயல்பாடு முற்றிலும் வித்தியாசமாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது. உடனே சகோதரி “இன்றே இப்பொழுதே வேண்டுமானாலும் வீட்டிற்கு வா” என்று கூறினார். அந்தப் பெண்மணி உடனே புறப்பட்டுச் சகோதரியின் வீட்டிற்குச் சென்று “நான் உன்னிடம் அப்படிப் பேசியது தவறு என்னைத் தவறாக எடுத்துக் கொள்ளாதே. ஏதோ அன்றைக்கு இருந்த மனநிலையில் நான் அவ்வாறு நடந்து கொண்டேன். அது எதையும் பெரிதாக மனதில் வைத்துக் கொள்ள வேண்டாம். இந்தச் சின்ன மனவருத்தத்திற்காக நாம் இத்தனை ஆண்டுகள் பேசாமல் இருப்பதும் சொந்தங்களின் பொது நிகழ்ச்சிகளில் நாம் கலந்து கொள்ளும் போது, சந்திக்கும் போது பேசாமல் செல்வது எனக்கு மிகுந்த மனவேதனையைக் கொடுத்தது,” என தன்னுடைய ஒட்டு மொத்த மனக்குறையையும் கொட்டிக் கண்ணீர் வடித்து தீர்த்தார்.

அந்தப் பெண்மணியின் சகோதரியும் “நானும் கொஞ்சம் பிடிவாதமாக தான் இருந்து விட்டேன். நான் செய்ததும் அவ்வாறு நடந்து கொண்டதும் கூட தவறுதான்” என்று தன்னுடைய மனக்குறையை சகோதரியிடம் கொட்டித் தீர்த்தார். இருவருமே தங்களுடைய பிடிவாதத்தை மறந்து பாசத்தாலும், அன்பாலும் இணைந்து கொண்டார்கள்.

இதிலிருந்து நாம் என்ன தெரிந்து கொள்கிறோம்? மனதின் அக இயக்கத்தைப் பொருத்த அளவில் தாம் ஒரு நிராயுதபாணி என்பதை விளங்கிக் கொண்ட பிறகு மனதில் மட்டும் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதை விட அந்தப் பிரார்த்தனையின் புறவடிவமான செயலின் மூலமாக நேரடியாக இறங்கிப் பேசியதாலும் அது சம்பந்தமாகச் செயல்பட்டதாலும் 6 ஆண்டுகள் பேசாமல் இருந்து வந்த கருத்து வேறுபாடு முடிவுக்கு வந்து விட்டது.

நம்மில் பலரும் இப்படி மனதைப் பற்றிய புரிதல் இல்லாத காலத்தில் நாம் ஏதாவது சண்டையோ கருத்து வேறுபாடுகளையோ ஏற்படுத்தி இருக்கலாம். மனதின் இயக்க உண்மையைப் புரிந்து கொண்ட பிறகு நாமாக உருவாக்கிய கருத்து வேறுபாடுகளை நம்முடைய புற அணுகுமுறையால் புதிய கோணத்தில் அணுகி மாற்றத்தை நடைமுறை வாழ்வில் ஏற்படுத்துவதே பிராத்தனையை விடச் சிறந்தது.

நம் பிரார்த்தனையின் முழு புற வடிவம் செயல் மட்டுமே.

**பிராத்தனையின் புற வடிவம் அதற்கான செயல்.**






## Sri Bagavath
## Android / IOS APP Smart Phone


Sri Bagavath APP QR Code

Sri Bagavath Android / IOS APP Smart Phone களில் பயன்படுத்தும் வண்ணம் தற்போது தயாராகியுள்ளது. இதை இலவசமாக பதிவிறக்கம் (Download) செய்து பயன்படுத்தலாம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் அனைத்து நூல்கள், பகவத்பாதை மாத இதழ்கள் என அனைத்தும் Pdf file ஆக இலவச Download செய்துகொள்ளலாம். மேலும் ஐயாவின் நிகழ்ச்சி விபரங்களையும், ஐயாவின் Audio, Video உரைகள் அனைத்தையும் காணும் வண்ணம் உருவாக்கப்பட்டுள்ளது. இதனை நீங்கள் பயன்படுத்திக் கொண்டு உங்கள் நண்பர்களுக்கும் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.



இந்த Android / IOS APP-ஐ எல்லோரும் பாராட்டத்தக்க வகையில் நமக்காக வடிவமைத்து தந்திருக்கிறார் இளம் தொழில் முனைவர். **கௌதமன் கந்தசாமி.** இவர் சேலத்தைச் சேர்ந்தவர். கோயமுத்தூர் PSG-ல் B.E., முடித்து பிறகு லண்டனில் M.S. படித்துள்ளார். சென்னையில் C Z Smart Mobility என்ற நிறுவனத்தை தொடங்கியுள்ளார்.

இவருக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து நம் அனைவரின் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.




அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

நாம் ஞானமுகாம் தொடங்கி 3 ஆண்டுகள் நிறைவடைந்துவிட்டன. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞானமுகாமில் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெற்றவர்கள் பலர். ஐயாவின் நூல்களைப் படிப்பதோடு மட்டுமல்லாமல் ஞானமுகாமில் கலந்து கொள்ளும் போது ஐயாவுடன் உரையாடி ஐயமின்றித் தெளிவு பெற ஞான முகாம் பேருதவி புரிகிறது.

அந்த வகையில் சென்னையில் ஜுலை மாதம் 30 மற்றும் 31-ஆம் தேதிகளில் பகவத் ஐயாவின் ஞானமுகாம் மைலாப்பூர் சாஸ்திரி ஹாலில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் புதிய அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர். இந்த ஞானமுகாமில் கர்னாடிக் இசையில் மூத்த வல்லுனரான மதுரை G.S.மணி ஐயர் அவர்கள் கலந்து கொண்டதோடு தன் அனுபவத்தையும் பகிர்ந்து கொண்டு தன்னுடைய பல வருடத் தேடுதலை நிறைவுக்குக் கொண்டு வந்த ஞானப்புரிதலின் சிறப்பைப் பற்றி விளக்கினார். ஞானமுகாமின் இரண்டாம் நாள் தொடக்கத்தில் திருமதி.முத்துலட்சுமி சரவணன் அவர்களும், திரு.தியாகராஜன் அவர்களும் தங்களின் அனுபவங்களையும் ஞானப்புரிதலின் சிறப்பைப் பற்றியும் புதிய அன்பர்களும் புரிந்துகொள்ளும் வகையில் எடுத்துரைத்தனர்.

ஹீலர் பாஸ்கர் மற்றும் அஃகு ஹீலர் உமர் பாரூக் அவர்கள் தங்களது கூட்டங்களில் நமது ஞானமுகாமின் சிறப்பையும் அவசியத்தையும் எடுத்துரைத்ததால் நூற்றுக்கும் மேற்பட்ட புதிய அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் கருத்துகளை மக்களுக்கு எடுத்துரைக்கும் ஹீலர் பாஸ்கர் அவர்களுக்கும் அக்கு ஹீலர் உமர் பாரூக் அவர்களுக்கும் பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஞானமுகாமை தொடர்ந்து சென்னையில் ஆகஸ்ட் மாதம் 2-ம் தேதி முதல் 8-ம் தேதி வரை மீனம்பாக்கம் AM Jain College Ground-ல் இந்து ஆன்மிகம் மற்றும் சேவை கண்காட்சி (8th Hindu Spiritual and Service fair 2016) நடைபெற்றது. இந்த கண்காட்சியில் நமது ஸ்ரீ பகவத் மிஷன் ஸ்டால் இடம் பெற்றிருந்தது. இங்கு ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்கள் விற்பனைக்கும் பகவத் பாதை மாத இதழ் இலவசமாகவும் வழங்கப்பட்டன. எளிமையாக்கப்பட்ட ஞானப்புரிதலை பலருக்கும் அறிமுகப்படுத்த இந்தக் கண்காட்சி பேருதவியாக இருந்தது. இந்த இந்து ஆன்மிக கண்காட்சியில் நமது ஸ்ரீ பகவத் மிஷனும் இடம் பெற மூல காரணமாக இருந்த சென்னை **CH.இரவிச்சந்திரன்** அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை ஞானமுகாமும் இந்து சமய ஆன்மிக மற்றும் சேவை கண்காட்சியில் இடம் பெற்ற நமது ஸ்ரீ பகவத் மிஷன் ஸ்டாலும் மிகச் சிறப்பாக நடைபெற அனைவரையும் ஒருங்கிணைத்து செயல்பட்ட சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் தலைவர். திரு. **இரவிச்சந்திரன்,** அவர்களும் அவரது குழுவினர் திரு.**தியாகராஜன்,** திரு.**பாலசுந்தரம்,** திருமதி.**முத்துலட்சுமி,** திரு.**சிவக்குமார்,** திரு.**சாய்விக்னேஷ்,** திரு.**சீதாராமன்,** திரு.**ஜெகதீசன்,** திருமதி **சுப்புலட்சுமி,** திரு.**மாரிமுத்து,** திரு.**சங்கரன்,** திரு.**விஸ்வநாதன்,** திரு.**சித்தார்தன்,** திரு.**முருகானந்தம்,** திரு.**பஷீர்,** திரு.**ராம்லால்,** திரு. **கார்த்திக்,** திரு.**சாரதி,** ஜெமினி திரு. **ஸ்ரீதர்,** திரு. **சுந்தரராஜன்,** திரு.**பாலசுப்ரமணியம்** என அனைவரும் தேனிக்களைப் போல் சுறுசுறுப்பாக செயல்பட்டனர். அவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இந்நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற நன்கொடைகளை வழங்கி உதவிய திருமதி. **வடிவு அம்மாள்,** திரு.**ஆனந்த்,** திரு.**கணேஷ்,** திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** தென்காசி திரு. **சந்தோஷ்** ஆகியோருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

Facebook மூலம் பல புதிய அன்பர்களை ஞான முகாமிற்கு வரவழைத்த திரு.RBS. **ஸ்ரீனிவாசன்** அவர்களுக்கும், ஞானமுகாம் நிகழ்ச்சியை Google Hangouts மூலம் நேரடியாக ஒளிபரப்பிய கனடா திரு.**ஜெயராமன்,** சென்னை திரு.**சந்திரசேகர்,** திரு.**ஆனந்த்,** திரு.**முரளி** ஆகிய அனைவருக்கும் இந்த நிகழ்ச்சி அனைத்தையும் பதிவுசெய்த அருட்ஜோதி TV Channel நிர்வாகத்திற்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நன்றியைத் உரித்தாக்குகிறோம்.

சென்னை நிகழ்ச்சியைத் தொடர்ந்து திருநெல்வேலி, பாபநாசத்தில் தன்னை அறியும் ஞானம் என்ற தலைப்பில் ஆகஸ்ட் மாதம் 13,14,15 ஆகிய 3 நாள் தொடர் சத்சங்கம் நடைபெற்றது. இதனை ஏற்பாடு செய்த பேராசிரியர் திரு. **நடராஜ்** மற்றும் வைத்தியர் திரு. **பாலசுப்ரமணியம்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிப் பலரின் உள்ளார்ந்த தொண்டால் பகவத் ஐயா வழங்கும் ஞானம் உலகெங்கும் சென்றடைந்து கொண்டு இருக்கிறது. இந்த உயர்ந்த தொண்டில் தங்களை இணைத்துக் கொண்ட அனைத்து நல்ல உள்ளங்களையும் மனதாரப் பாராட்டி மகிழ்கிறோம்.

# ஸ்ரீ பகவத் பவன் அழைப்பு







ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம். நமது ஸ்ரீ பகவத் பவன் இல்லம் பலரின் பங்களிப்பால் மிகச்சிறப்பாகக் கட்டி முடிக்கப்பட்டுத் தற்போது பயன்பாட்டிற்கு வந்துள்ளது. செம்டம்பர் மாதம் 10ம் தேதி முதல் 13ம் தேதி வரை ஞானமுகாம் ஒன்று கட்டணம் ஏதுமின்றி இலவசமாக நடத்த உள்ளோம்.

இதனைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் அக்டோபர் மாதத்தில் இருந்து ஸ்ரீ பகவத் பவன் இல்லத்தில் தங்கவுள்ளார்கள். அதுசமயம் ஐயாவைச் சந்திக்க விரும்புவர்கள் முன் அனுமதி பெற்று ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கி ஐயாவுடன் உரையாடித் தெளிவு பெற்றுச் செல்லலாம்.

இந்த இடம் இயற்கை சூழலுடன் அமைந்துள்ளதால் மன அமைதியை தருவதாகவும் ஞானத் தெளிவை புரிந்து கொள்ள ஏற்ற இடமாகவும் அமையும்.

எனவே இந்த வாய்ப்பினை ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் பயன்படுத்திக் கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

முன் அனுமதி பெற:
செல்: 99942 05880, 97891 65555

# Vedhantham - English Book

வேதத்தின் அந்தத்தை முழுமையாகக் கூறும் ஐயாவின் நூலான **"வேதாந்தம்"** நூலின் ஆங்கில வடிவம் விரைவில் வெளிவர இருக்கிறது. இந்நூலை அச்சிட்டு குறைந்த விலையில் வெளியிட நன்கொடையாளர்கள் வரவேற்கப்படுகிறார்கள். வாய்ப்புள்ளவர்கள் நன்கொடைகளை வழங்கி இந்நூல் வெளியிட உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்
**ஸ்ரீ பகவத் மிஷன்,**
சேலம்-3. செல் : 97891 65555

## சென்னையில் வாரந்தோறும் சத்சங்கம் நடைபெறும் இடங்கள்

**ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம்,**
24/35, கிருபசங்கரி தெரு, வெஸ்ட் மாம்பலம்,
சென்னை - 600033.
போன் : 044 24802986, செல் : 94444 02986,
95000 29864

**ஸ்ரீ பகவத் மிஷன் அம்பத்தூர் மையம்,**
23/10, பழைய பரோடா வங்கித் தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர் சென்னை - 600053.
செல் : 98840 97438, 93810 19473,
94444756744

பிரதி வாரம் ஞாயிறு மாலை 6:00 மணி முதல் சத்சங்கம் நடைபெறும். மேலும்
ஸ்ரீ பகவத் ஐயாவின் அனைத்து நூல்கள் மற்றும் Video DVD Audio CD, இங்கு கிடைக்கும்.





# நிகழ்ச்சி நிழல்கள்



சென்னை ஞானமுகாம்



இந்து ஆன்மிகக் கண்காட்சியில்
C.H. ரவிச்சந்திரன் குடும்பத்தினருடன்



இந்து ஆன்மிகக் கண்காட்சியில் திரு. பாலசுந்தரம்,
திருமதி. சுப்புலட்சுமி குடும்பத்தினருடன்





திரு. தியாகராஜன் அவர்கள் மடிப்பாக்கம்
திரு. ஜெகதீசன் அவர்களை கவுரவிக்கும் போது.



இந்து ஆன்மிகக் கண்காட்சியில் திருமதி. முத்துலட்சுமி சரவணன்



சென்னை ஞான முகாமில் கர்நாடக இசை கலைஞர்
மதுரை G.S.மணி ஐயர் அவர்கள்





ஸ்ரீ பகவத் ஐயா முன்னிலையில் திரு. விபாகரன் வெளியிட
மொபைல் ஆப்பை திரு சம்பந்த முதலியார் பெறுகிறார்.



Calgary Airport-ல் இருந்து திரு. ஜெயரான் அவர்கள்
ஐயாவின் நேரடி ஒளிபரப்புடன்



Two Days Intensive Programme on

# Enlightenment

in English

At **Bangalore** - by Living Master : **SRI BAGAVATH**

Date : **Sep 17 & 18, 2016 Saturday & Sunday**
Time : **10:00 AM to 1.30 PM**
Venue : **Sri Mahan Odukathur Mutt**
on the Southern side of Ulsoor Lake,
No.13, Gangadhara Chetty Road,
Ulsoor, Bangalore - 560 042.




**Enlightenment and Awakening.**
**Psychological & Real Problems.**
**Who am I?. Karma-fate.**
**Secret of Birth. Miracles.**

*Admission Free. Limited Seats Only. Prior Registration Required.*

**Note: Books Available in the Venue. Donations are Accepted to meet the expenses.**
**Lunch can be Arranged on Prior Request.**

*For Registration Please Contact:*

G.K. Babulal : 94490 35454 Saravanan : 98867 47564
Sarathy : 96635 48010 Rajasekar : 98869 26464
www.pravaagam.org www.sribagavath.org



# ஜென் கதை

## புலியின் வேட்டை



ஒரு குடும்பஸ்தன் தன்னுடைய வாழ்க்கையில் நிம்மதியே இல்லாமல் வருந்தினான். தான் கஷ்டப்பட்டு சம்பாதித்துக் கொண்டுவரும் வருமானம் எல்லாம் குடும்ப செலவு, குழந்தைகளின் கல்வி, பெற்றோரின் மருத்துவச் செலவு என எல்லாம் செலவு ஆகிவிடுகிறது என்று புலம்பிக்கொண்டு இருந்தான். தான் சம்பாதிக்கும் பணம் எதுவும் தனக்கு எந்த வகையாலும் மகிழ்ச்சியைத் தரவில்லை. எல்லாமே குடும்பத்திற்கே போய்விடுகிறது என்று வாழ்க்கையை வெறுத்துப் போய் பேசிக் கொண்டு இருந்தான். இதனால் என்ன சம்பாதித்து என்ன பிரயோசனம் என்று புலம்பிக்கொண்டு இருந்தான். காட்டில் வாழும் மிருகங்கள் கூட சுகமாகவும், மகிழ்ச்சியாகவும், சுதந்திரமாகவும் இருக்கின்றன. ஐந்து அறிவு ஜீவராசிகள் கூட மகிழ்ச்சியாக இருக்கின்றன. ஆனால் ஆறு அறிவு படைத்த மனித அறிவில் சிறந்தவன் என்று கூறிக் கொண்டு நாம் தான் மிகவும் கஷ்டப்படுகிறோம் என வருந்தினான்.

இந்த நிலையில் தன்னுடைய மனக்குமுறல்களைத் தீர்க்க ஓர் ஞானியிடம் சென்று தன்னுடைய வருத்தங்களை எல்லாம் கொட்டி தீர்த்தான்.

குடும்பஸ்தன் கூறுவதை நிதானமாக கேட்டுக்கொண்டு இருந்தார் ஞானி.

“சாமி எனக்கு வாழ்க்கையில் ஐந்து அறிவு மிருகங்கள் போல் சுதந்திரமாக, மகிழ்ச்சியாக வாழ்ந்தாலே போதும்” என்றான்.

ஞானி நிதானமாக அவனைப் பார்த்துவிட்டு “சரி என்னுடன் காட்டிற்கு வா, சில நாட்கள் தங்கிவிட்டு வரலாம்,” என்றார்.

குடும்பஸ்தன் தன்னுடைய குடும்பத் தொந்தரவுகளிலிருந்து விடுபட்டுக் காட்டிற்குச் சென்று கொஞ்ச நாட்கள் நிம்மதியாக இருக்கலாம் என, “சரி சாமி” என்றான்.

ஞானியும், குடும்பஸ்தனும் ஓர் அடர்ந்த காட்டின் மையப் பகுதிக்கு அடுத்த நாள் மாலைக்குள் சென்று சேர்ந்தனர். ஓர் உயரமான மரத்தின் மேல் ஒரு சிறிய குடிலை அமைத்தனர். அந்த குடிலை அமைக்கவே படாதபாடு பட்டு உருவாக்கினார்கள். அங்கு எல்லாவிதமான கொடிய மிருகங்களும் வசித்து வந்தன. காட்டு மிருகங்களின் சப்தம் குடும்பஸ்தனுக்கு மிகுந்த பயத்தை ஏற்படுத்தியது. குடும்பஸ்தன் குடிலிலிருந்து கீழே பார்த்துக் கொண்டு இருக்கும்போது புலி ஒன்று மானை அடித்து இரையாக்கிக் கொண்டது.

அந்தப் புலியால் மானின் இரையை நிறைவாக உண்ண முடியவில்லை. அதற்குள்ளாக மற்ற சிங்கங்களின் கூட்டம், ஓநாய்களின் கூட்டம், இராட்சு கழுகுகளின் கூட்டம் என அனைத்தும் சூழ்ந்து கொண்டு புலியைத் துறத்தியன. புலியால் மான் இரைச்சியை கொஞ்சம் மட்டும் தான் உண்ண முடிந்தது. கொஞ்ச நேரத்தில் அந்த மானின் இரையை மற்ற மிருகங்கள் அனைத்தும் முழுவதுமாகத் தின்று தீர்த்துவிட்டன.

புலி தனக்கு உணவு கிடைக்கவில்லை என்று கொஞ்சமும் வருந்தாமல் அடுத்த இரையைத் தேட ஆரம்பித்தது. இந்த முறை புலி ஒரு மானை அடித்து ஒரு மரத்தின் மேல் வைத்து உண்ணத் தொடங்கியது. இருந்தாலும் அதற்குள்ளாக மற்ற மிருகங்கள் சூழ்ந்துகொண்டு அந்த மானைத் தின்று தீர்த்தன. குடும்பஸ்தன் தங்கி இருந்த 4 நாட்களில் புலி 3 மானை வேட்டையாடிய போதும் அது உணவாக உட்கொண்ட இரையின் அளவு மிகவும் குறைவாகத் தான் இருந்தது. புலியிடம் அடுத்த இரையைத் தேடும் வேலை மட்டுமே இருந்தது.

இது போகவும் ஒவ்வொரு மிருகமும் எந்த நேரத்தில் எதுவும் நடக்கலாம் என்று உயிரைத் தக்க வைத்துக் கொண்டு வாழும் சூழ்நிலையில் தான் வாழ்ந்து வந்தன. ஒவ்வொரு வினாடியும் என்ன நடக்கும் என்று கூற முடியாத பாதுகாப்பற்ற சூழ்நிலையே இருந்தது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் எல்லா மிருகங்களும் தங்களுடைய உயிரைப் பாதுகாத்துக் கொண்டும் இரையைத் தேடிக்கொண்டும் நிறைவாகவும் வாழ்ந்து கொண்டு இருந்தன.

ஞானி எதுவும் பேசவில்லை.

குடும்பஸ்தனுக்கு காட்டில் நல்ல உணவு கிடைக்கவில்லை. பயத்தை ஏற்படுத்தும் மிருகங்களின் சப்தத்திற்கு இடையே சரியான உறக்கமும் இல்லை. மரத்தில் பாம்புகளின் தொந்தரவு எனப் பாதுகாப்பு அற்ற சூழ்நிலையும், பய உணர்வும் இருந்து கொண்டே இருந்தது. “இந்தக் கொடிய காட்டில் நாம் இருக்க வேண்டாம், ஊர் திரும்புவோம்” என்றான் குடும்பஸ்தன்.

ஞானி, “மிருகங்கள் எல்லாம் எவ்வளவு சுதந்திரமாக மகிழ்ச்சியாக இருக்கின்றன பார்த்தாயா? மனிதர்கள் நாம் தான் மிகவும் கஷ்டப்படுகிறோம்,” என்றார்.

குடும்பஸ்தன், “சாமி என்னை மன்னிக்கவும். நான் தான் தவறாகப் புரிந்துகொண்டேன். நான் இருக்கும் நிலை மகிழ்ச்சியானது என்பது தெரியாமல் இருந்திருக்கிறேன். இப்போது தெரிந்து கொண்டேன். நாம் இங்கிருந்து மிகவும் ஜாக்கிரதையாக ஊருக்குச் செல்ல வேண்டும்” என்றான். “இருந்தாலும் மனித வாழ்க்கையில் ஒரு நிம்மதி இல்லையே அது ஏன்?” என்றான்.

ஞானி, “மனிதர்கள் ஆகிய நாம், பாதுகாப்பாகவும் மகிழ்ச்சியாகவும் நிறைவாகவும் எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கும் வகையில் நமக்காக அமைக்கப்பட்டது தான் குடும்ப வாழ்வு. பல குடும்பங்கள் ஒன்று கூடி ஒரே சமுதாயமாக தத்தம் தேவைகளை நிறைவுபடுத்திக்கொள்ள உருவாக்கி கொண்ட நெறிமுறைகள் தான் மனித குல வாழ்வு” என்றார்.

குடும்பஸ்தன், “அப்படி என்றால் நமக்கு ஏற்படும் பயம், பாதுகாப்பு அற்ற உணர்வு, வேதனை என ஏன் ஏற்படுகிறது?” என்றான்.

சமுதாய வாழ்வு என்பது இயற்கையாக அமைந்த ஒன்று இல்லை. நம் அனைவரின் நலனுக்காக செயற்கையாக நமக்கு நாமே உருவாக்கியது தான். மனதில் தாமாக ஏற்படும் அத்தனை உணர்வுகளும் மிருகங்களின் இயக்கத்தை போன்று இயற்கையானது. நமது அக உணர்ச்சிகள் அனைத்தும் மிருகங்களும், காடுகளும் போன்றது. அங்கு எது வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் நிகழலாம். அவை முழுவதும் நமது கட்டுப்பாட்டில் இல்லை. நமது சமுதாய வாழ்வு என்பது நமது தேவை பாதுகாப்பு, என அனைத்தையும் அடிப்படையாக கொண்டு அமைக்கப்பட்டது. இங்கு எல்லோருக்கும் எல்லாம் கிடைக்க வேண்டும் என்ற தர்ம நியாயங்களின் அடிப்படையில் உருவாக்கப்பட்டன. அதை மதித்து வாழ்வது தான் சமுதாய வாழ்வு ஆகும்.

குடும்பஸ்தனுக்கு இந்த 4 நாட்கள் காட்டில் வாழ்ந்த வாழ்வு தான் நாம் சமுதாயத்தில் எவ்வளவு பாதுகாப்பாகவும், நிறைவாகவும், மகிழ்ச்சியாகவும் வாழ்கிறோம் என்பதைப் புரிய வைத்தது. மிருகங்கள் எந்தப் பாதுகாப்பும் இல்லாத, எதுவும் நிகழலாம் என்ற சூழ்நிலையில் வாழ்கின்றன. புலி தன்னுடைய உணவை மற்றவை பறித்து கொண்ட போதும் வருந்தாமல் அடுத்த இரையைத் தேட தொடங்கிவிடுகிறது. நாம் எவ்வளவு பாதுகாப்பான சூழ்நிலையில் நமது குடும்பத்துடன் உணவு, உறக்கம், தேவைகள் என நிறைவாகவும், மகிழ்ச்சியாகவும் வாழும் தன்மையில் வாழ்ந்து வருகிறோம். இனிமேல் புலம்புவதை விட்டுவிட்டுப் புலியைப் போல் அடுத்த இலக்கை நோக்கி நகர வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டு மகிழ்ச்சியாகக் குடும்ப வாழ்க்கை வாழத் தொடங்கினான்.

**புலம்புவதை விட்டுவிட்டு நமது இலக்கை நோக்கி செல்வதே சிறந்தது.**

Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555